[28th January 1961

*Sandalwood*

*** 228 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1959-60-ம் ஆண்டில் ஜவ்வாது மலையில் சந்தனக்கட்டையின் மூலம் கிடைத்த வருவாய் எவ்வளவு?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : An amount of Rs. 27,60,855 (rupees twenty-seven lakhs sixty thousand eight hundred and fifty-five only) has been realised during 1959–60 by the sale of sandalwood that was extracted from the Javadi Hills.

SRI S. M. ANNAMALAI : ஆண்டு ஒன்றுக்கு 27 லட்ச ரூபாய்க்கு மேல் ஜவ்வாது மலையிலுள்ள சந்தனக் கட்டை மூலமாக வருவாய் இருக்கிறது. அப்படிப்பட்ட பிரதேசத்திலுள்ள மக்களுக்கு வேறு தொழில் கிடையாது. அவர்களுக்குத் தொழில் தரவேண்டி அங்கு சந்தன எண்ணெய் தொழிற்சாலை ஏற்படுத்த சர்க்கார் முன் வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அங்கு சந்தனக் கட்டை அதிகமாகக் கிடைக்கின்றது என்றாலும், சந்தன எண்ணெய் உற்பத்தி செய்கின்ற தொழில் நடத்துவதென்றால், அதற்குத் தகுந்த இடம் பார்த்துத்தான் அதை அமைக்க வேண்டுமே தவிர, அந்த இடத்திலே அமைக்கமுடியும் என்று நான் சொல்வதற்கில்லை.

*Chilli crops*

*** 229 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மிளகாய் பயிருக்கு பூச்சி மருந்து பாதி விலையில் தரப் படுகிறதா?

(இ) இல்லையாயின் காரணமென்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) The sale of pesticides and fungicides at half cost is allowed as a general rule to food crops only. Since the chilli crop is a cash crop, no concessional sale of pesticides and fungicides to this crop has been allowed.

SRI S. M. ANNAMALAI : மிளகாய் வியாபாரப் பொருள் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். கரும்புப் பயிர் போன்றவைகளுக்கு பாதி விலையில் அரசாங்கம் பூச்சி மருந்து தருகிறார்களே, அது போல் ஏன் மிளகாய் பயிருக்கும் தரக் கூடாது?

28th January 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மிளகாய்க்குத் தர வேண்டிய அவசியம் இல்லை என்றுதான் அரசாங்கம் கருதுகிறது.

SRI V. SUBBIAH : நம் தேசத்திலிருந்து மிளகாய் இலங்கை, மலேயா போன்ற வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி ஆகிறது. அதனால் அரசாங்கத்திற்கும் வருமானம் கிடைக்கிறது. மிளகாயும் விவசாயிகளுக்கு ஓரளவு உணவுப் பொருளாக இருக்கிறது. அதை வைத்துத்தான் அவர்கள் வாழ்க்கையைப் பெரும் பகுதி நடத்தவேண்டிய நிலைமை இருப்பதால், பூச்சி மருந்தைப் பாதி விலைக்குக் கொடுக்கவேண்டிய அவசியம் இருக்கிறது என்று அரசாங்கம் நினைக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அரசாங்கத்தின் கொள்கை உணவுத் தானியங்களைப் பயிரிடும்போது இந்தச் சலுகை காட்டுவது என்பது அப்படிப் பார்க்கும்போது, உணவுப் பயிரைவிட மிளகாய்ப் பயிர் வைக்கும்போது அதிக லாபம் கிடைக்கிறது என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

*Small-scale industries*

* 230 Q.—SRI S. PAKKIRISAMI PILLAI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether there is any Government Order to relax the rules under the Public Health Act for the municipalities to grant licences to small scale industries using ½ h.p., 1 h.p. or 2 h.p. motors in the residential areas under such municipalities;

(b) whether the municipalities have not been intimated of such amendments in the provisions of the Act; and

(c) the reasons for such delay in intimating the municipalities about the change in the rules for granting licences?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Under the Madras Public Health (Amendment) Act, 1958, the local authority may, subject to such restrictions, limitations and conditions as may be prescribed, permit small horse-power installations in residential areas notified under section 89 of the Madras Public Health Act, 1939.

(b) The Municipalities are aware of the amendment.

(c) Does not arise.

SRI S. PAKKIRISAMI PILLAI : ஜில்லாக்களிலுள்ள எல்லா முனிசிபாலிடிகளுக்கும் இந்தத் தகவல் கிடைக்கவில்லை. அதனால், சிறு கைத்தொழிற்சாலை வைக்கிறவர்கள் பாதிக்கப்படுகிறார்கள். எந்தெந்த முனிசிபாலிடிகளுக்கு இம்மாதிரி உத்தரவு போய்ச் சேரவில்லையோ அங்கு இதை உடனடியாக அனுப்புவதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்வார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, the Government have specified by notification in Government Order No. 1744, dated 26th October 1960, the trades which may be deemed to be